

# விரல்

இரவு பத்து மணிக்கு திடீரென்று கதவு அதிர்ந்தது. ரங்க நாதனின் மனைவி, "வேண்டாம். திறக்க வேண்டாம். அந்தக் குடிகாரந்தான் வந்திருக்கான்" என்றாள்.

அப்போது மதுவிலக்கு அமலிலிருந்தது.

"ராமசாமியா?"

"ஆமாம். சாயங்காலமே வந்தான். நீங்க இல்லேன்னு சொல்லியனுப்பிச்சுட்டேன்."

வாசல் கதவு மறுபடியும் விபரீதமாக ஆடியது. கூடவே ராமசாமியின் குரலும். "ரங்கநாதன்! ரங்கநாதன்!"

ரங்கநாதன் தூக்கம் முழுக்கக் கலைந்து மனைவியைக் கோபத்துடன் பார்த்தான்.

"நான் சாயங்காலம் எல்லாம் வீட்டிலேயேதானே அடைஞ்சு கிடந்தேன்? ஏன் சொல்லலை?"

"எதுக்குச் சொல்லறது? குழந்தைகள்ளாம் பயந்துக்கறது."

"அவன் உங்களை என்ன பண்ணினான்?"

"வேண்டாம். குடிகாரங்களை வீட்டிலே அழைச்சுண்டு வந்து உறவு கொண்டாட வேண்டாம்."

இப்போது கதவு உடைந்து விழுந்து விடும் போல இருந்தது. தொடர்ந்து, "ரங்கநாதன்! ரங்கநாதன்!" என்று ராமசாமியின் குரல் வயிற்றைக் கலக்கும்படி கேட்டுக் கொண்டிருந்தது. நிச்சயம் அக்கம் பக்கத்துக்காரர்கள் விழித்துக் கொண்டிருப்பார்கள். அடுத்த நாள் காலை அவர்கள் முகத்தில் விழிக்க நேர்ந்தால் அவர்களுடைய விமரிசனம் அவர்கள் கண்களில் இருக்கும். வெளிச்சத்தில் கண்கள் கொடூரமானவை.

அவள் சொன்னதில் உண்மை இருந்தது. கதவைத் திறந்தவுடன் ராமசாமியைப் பார்த்து அவனே பயந்தான். முகத்தில் காடாக தாடி மீசை. சாராய நெடி. துணிமணியெல்லாம் இரத்தக்கறை. வியர்வை நாற்றம். குழந்தைகள் இரண்டும் விழித்துக்கொண்டு அவள் சொல்லிய படியே ராமசாமியைப் பார்த்துப் பயந்து அலறின.

ரங்கநாதன், "குழந்தைகளை எடுத்துண்டு நீ சமையக் கட்டுக்கு போ" என்று மனைவியிடம் சொன்னான். அதைச் சொல்லும் போதே அங்கே தரையெல்லாம் ஈரமாக இருக்கும் என்ற நினைப்பும் வந்தது.

அவள் மறுபேச்சுப் பேசாமல் ஒரு குழந்தையைத் தூக்கிக் கொண்டு இன்னொன்றைத் தரதரவென்று தரையோடு இழுத்துப் போனாள்.

ரங்கநாதன் ராமசாமியை ஒரு நாற்காலியில் கிடத்தினான். ஒரு பாலக்காட்டுத் துண்டைத் தண்ணீரில் நனைத்து வந்து ராமசாமியின் முகத்தைத் துடைத்தான். ராமசாமி கையை உயர்த்தினான். அடி தலையில் இல்லை. வலது கையிலிருந்துதான். இரத்தம் பெருகிக் கொண்டிருந்தது.

ரங்கநாதன் இருட்டில் தெருமுனைக்குப் போய் அங்கு மிங்கும் பார்த்தான். அந்த வேளையில் ஒரு வண்டியும் கண்ணில் தென்படவில்லை. மீண்டும் வீட்டுக்கு ஓடி வந்து ராமசாமியை உலுக்கினான். "கொஞ்சம் நடந்து வர முடியுமா? கிட்டக்க ஒரு டாக்டர்கிட்டே போய் ஒரு கட்டுக் கட்டிக்கொண்டு வந்து விடலாம்."

ராமசாமி சிரமப்பட்டு நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான். "கார்த்தாலே பார்த்துக் கொள்ளலாமே" அவனுடைய 'ல'வெல்லாம் 'ழ'வாக ஒலித்தன.

"இல்லை. கை ரொம்ப மோசமாயிருக்கு."

ராமசாமியால் சரியாக நிற்க முடியவில்லை. ரங்கநாதன் அவனைத் தாங்கிய வண்ணம் வெளியே அழைத்துப் போனான். அவர்கள் தெருவில் இறங்கியதும் வீட்டுக்கதவு மூடித் தாளிடப் பட்டது. அவளுக்குச் சற்று நிம்மதி அளித்தது.

அது ஒரு இருபத்து நாலு மணி நேர கிளினிக். அங்கு ஒரு நர்ஸும் உதவியாளனும்தான் அப்போதிருந்தார்கள். நர்ஸ் ராமசாமியை ஏற இறங்கப் பார்த்தாள். உதவியாளன் அதைக்

கூடச் செய்யவில்லை. "நீங்க ராயப்பேட்டா ஆஸ்பத்திரிக்கே போயிடுங்க" என்றான்.

"ஏன், நீங்க பாக்க மாட்டீங்களா?"

"இல்லை."

"ஏன்?"

"அடி பெரிசாயிருக்கு. போலீஸ் கேஸ்னா வீண் தொந்தரவு."

"போலீஸ் கீலீஸ் ஒண்ணுமில்லே. சும்மா கீழே விழுந் துட்டாரு. அவ்வளவுதான்."

"எக்ஸ்ரேயெல்லாம் எடுக்க வேண்டி வரும். நீங்க அங்கேயே போயிடுங்க."

"டாக்டரைக் கூப்பிட மாட்டாயா?"

"டாக்டர் வரமாட்டாரு, சார். இது போலீஸ் கேஸ். ஆள் குடிச்சிருக்காரு."

ராமசாமி அப்படியே ஒரு நாற்காலியில் சாய்ந்திருந்தான். வெளியூரிலிருந்து சென்னைக்கு வந்து ஒரு மாதமிருக்காது. பேட்டைக்குப் பேட்டை கள்ளச்சாராயம் விற்கும் இடமெல்லாம் அவனுக்குத் தெரிந்திருந்தது.

"சரி, கைக்கு ஏதாவது ஃபர்ஸ்ட் எய்டாவது செய்யுங்க. நான் ஆஸ்பத்திரிக்கே கொண்டு போறேன்."

கிளினிக் உதவியாளன் ராமசாமியின் கையைத் துடைத்த போது ரங்கநாதனுக்குத் தலை சுற்றியது. ராமசாமியின் ஆள் காட்டி விரல் நடுவிரல் இரண்டும் பாதிக்கு மேல் நசுங்கித் தொங்கிக் கொண்டிருந்தன. உதவியாளன் இன்னும் பஞ்சு கொண்டு வருவதற்காக நகர்ந்தபோது ரங்கநாதன் ராமசாமியைக் கேட்டான். "இப்படி எப்படிப்பா அடிபட்டுண்டே?"

ராமசாமி தலையை மட்டும் அசைத்தான்.

ராயப்பேட்டைக்கு அந்த நேரத்தில் பஸ் கிடையாது. சைக்கிள் ரிக்ஷாவுக்கு அது சாத்தியமில்லாத தூரம். ஆனால் ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டும் என்று சொன்னதில் ஒரு ஆட்டோரிக்ஷாக்காரர் மறு பேச்சு பேசாமல் வந்தார். ரங்கநாதன் வண்டியை கிளினிக் வாசலில் நிறுத்திவிட்டு உள்ளிருந்து ராமசாமியை அழைத்து வரப் போனான். ராமசாமி ஓரளவு தன்னைச் சுதாரித்துக் கொண்டிருந்தான்.

“உனக்கு ரொம்பத் தொந்தரவு தரேன், ரங்கநாதன்.”

“சரி, சரி, வா.”

ரங்கநாதன் ராமசாமியைக் கைத்தாங்கலாகப் பிடித்து வந்து ஆட்டோவில் உட்கார வைத்தான். அவனும் ஏறியதும் வண்டி கிளம்பியது.

காற்று ஜில்லென்று சுகமாக முகத்தில் வீசியது. ராமசாமி சொன்னான். “கையே போச்சு. இனிமே கையே போச்சு!”

“ஆஸ்பத்திரி போய்ப் பார்க்கலாம்.”

“இனிமே எழுதவே முடியாது.”

ரங்கநாதனுக்கு அதற்கு உடனே ஆறுதலாகப் பேச முடிய வில்லை. “எங்கே போய் இப்படி அடிபட்டுண்டே?”

ராமசாமி வெறுமனே முனகினான்.

ராயப்பேட்டை ஆஸ்பத்திரியை அடைந்ததும் ஆட்டோ ரிக்ஷாக்காரர் மீட்டருக்கு மேல் ஒரு பைசாகூடக் கேட்காதது ரங்கநாதனுக்கு வருத்தமாக இருந்தது. வெறும் ஈரப்பஞ்சால் காயத்தைத் துடைத்து ஒரு சிறு கட்டு போட்டதற்கு அந்த கிளினிக் ஆள் பத்து ரூபாய் வாங்கிக் கொண்டிருந்தான்.

ஆஸ்பத்திரி காஷுவாலிடி பகுதியில் சீட்டு எழுதும் ஆளைத் தேடி ரங்கநாதன் சென்றான். அவன் ராமசாமியைப் பார்த்து, “எப்படி அடிபட்டது?” என்று கேட்டான்.

ராமசாமி பதில் சொல்லாமல் நின்றான். அந்த ஆள் மறுபடியும் கேட்டான். ரங்கநாதன் பதில் சொன்னான். “ஒரு ரிக்ஷா இடிச்சுது.”

“ரிக்ஷாவா?”

“ஆமாம். ஆட்டோ ரிக்ஷா.”

“ரிக்ஷா இடிச்சா கை நசுங்குமா?”

“இல்லை. வேகமா இடிச்சுடுத்து.”

அந்த ஆள் சீட்டு எழுதுவதை நிறுத்திவிட்டான். ரங்கநாதன் தழைந்த குரலில் சொன்னான். “அவருக்கே தெரியாது.”

“ஏன் சார், நீங்கள்ளாம் படிச்சவங்க...”

“அவரு நிலையைத்தான் பார்க்கறீங்களே? எங்கேயோ கொஞ்சம் ஜாஸ்தியாப் போட்டுட்டாரு.”

"அப்படியே கலாட்டா பண்ணியிருப்பாரு."

"இல்லீங்க, அவரு அப்படிப்பட்ட ஆள் இல்லை."

"சரி, என்ன உத்தியோகம் பாக்கறாரு?"

"ஒண்ணுமில்லே."

"இவருக்கா?"

"ஆமாம், வருஷக் கணக்கா வேலையில்லாமதான் அலைய றாரு."

"நீங்க என்ன வேணும்?"

"சிநேகிதர்தான். அவரோடு படிச்சேன்."

அந்த ஆள் ஒரு சீட்டை எழுதிக் கொடுத்துவிட்டு, "வாங்க, உள்ளே வாங்க" என்று உள்ளே அழைத்துப் போனான். ஒரு டாக்டரிடம் ஒரு கையெழுத்து வாங்கி அவனே அவர்களை எக்ஸ்ரே எடுக்குமிடத்திற்கு அழைத்துப் போனான். "அப்படியே வெளியிலே உட்கார்ந்திருங்க" என்றான்.

ரங்கநாதன் கேட்டான், "ரிசல்ட் இப்பவே தெரியுமா?"

"காலைலேதான் நீங்க வரணும். இப்போ சும்மா ஒரு கட்டுப் போட்டு அனுப்புன்னுதான் டாக்டர் சொல்லியிருக்காரு."

"கட்டு போட எங்கே போகணும்?"

"கொஞ்சம் அங்கே உக்காந்திருங்க. டிரஸ் பண்ணறவரு வெளியிலே போயிருக்காரு. வந்தவுடனே சொல்லறேன். இது இவராப் பட்டுண்ட அடிதானே?"

"ஆமாம், ஆமாம்."

"இப்படிக்குடிச்சுட்டு இருக்கிறவரை வெளியிலே அனுப்பிடறீங்களே? இங்கேயே போலீஸ் ஆளு யாராவது இருந்தா எவ்வளவு சங்கடம் தெரியுமா?"

வெராண்டாவில் பெஞ்சில் காத்திருந்தபோது மறுபடியும் ராமசாமி அரற்றினான். "இனிமே எழுதவே முடியாது."

ரங்கநாதனுக்கு ஆத்திரமாக வந்தது. "இனிமே நீ எழுதி என்னாகணும்? பொண்டாட்டி குழந்தைகளை ஊரிலே தவிக்க விட்டு இங்கே வந்து மத்தவங்க பிராணத்தை எடுக்கறே. யார் யார் கால்ல கையில விழுந்து வேலை வாங்கிக் கொடுத்தா இரண்டு நாள் நிக்கறதில்லே."

ராமசாமி நிராதரவாக ரங்கநாதனைப் பார்த்தான்.

அப்போது ஆஸ்பத்திரிக்கு இன்னொரு கேஸ் வந்தது. விபத்து நேர்ந்த இடத்திலேயே மரணம். உடலை வெரண்டாவுலேயே போட்டுவிட்டு முகத்தை மூடினார்கள். ஒரு ஆஸ்பத்திரி சிப்பந்தி ரங்கநாதனிடம் வந்து, "நீங்க உள்ளே போங்க" என்றான். ரங்க— நாதன் ராமசாமியை உள்ளே அழைத்துப் போனான்.

ராமசாமியின் கையில் இரத்தம் பெருகுவது நின்றிருந்தது. விரல்கள் நசுங்கியது தெளிவாகத் தெரிந்து காயத்தை இன்னும் கோரமாக்கியது.

இருவரும் ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்தார்கள். ராமசாமி, "பசிக்கிறது" என்றான்.

"இந்த வேளையிலே இங்கே சாப்பிடறதுக்கு என்ன கிடைக்கும்?"

"போலீஸ் ஸ்டேஷன் கிட்டே கபே அமீனோ அமீரோ உண்டு இல்லே?"

"என்கிட்டே இரண்டு ரூபா முழுசா இல்லை. இந்தக் கட்டை மட்டும் அந்த கிளினிக்காரனே போட்டிருந்தா வீட்டிலேயே சாப்பிட்டிருக்கலாம்."

"உன் பெண்டாட்டி போட்டிருப்பாளா?" ரங்கநாதன் பதில் தரவில்லை.

"இந்த அடி கூட இன்னொருத்தன் பெண்டாட்டியாலே தான் பட்டது."

"யாரு?"

"ராமப்பன்."

"அவன் வீட்டுக்கு எப்போ போனே? அங்கேதான் குடிச்சியா?"

"இல்லை, உன் வீட்டுக்கு வந்து நீ இல்லேன்னவுடனேதான் அவன் வீட்டுக்குப் போனேன். அவனும் இல்லைன்னவுடனே தான் பாத்திரக்கடைக்குப் போனேன்."

"பாத்திரக் கடையிலே சாராயம் விக்கறானா?"

"டிங்க்சர். இன்னிக்குத் தலை ரொம்பச் சுத்தித்து. தெருவிலே விழுந்து கிடக்க வேண்டாம்னு மறுபடியும் ராமப்பன் வீட்டுக்குப் போனேன்."

"அவன் இருந்தானா?"

"தெரியாது. அவன் பெண்டாட்டிதான் கதவைத் திறந்தா. என்னைப் பார்த்துவிட்டு உடனே திடீர்னு மூடினா. அப்பதான் கதவிலே கை சிக்குண்டுடுத்து."

ரங்கநாதனுக்கு வாய்வரை குடல் புரண்டு வந்தது.

"நான் கை கைன்னு கத்தினேன். அவளைத்தான் ஏதோ பண்ண வந்துட்டேன்னு அவ கதவை இன்னும் அழுத்தித் தாப்பாளும் போட்டுட்டா."

ரங்கநாதன் ராமசாமியைக் கட்டிக்கொண்டான். "உனக்கு ஏண்டா இப்படித் தலையெழுத்து?"

"அப்புறம் எதிர் வீட்டுக்காரர் ஒருத்தர் வந்து அவளை கதவைத் திறக்கச் சொல்லி என் கை சிக்கிண்டதை வெளியே எடுத்தார்."

"ராமப்பன் இல்லையா?"

"இல்லையே."

ரங்கநாதன் ராமசாமியை மெதுவாக, கபே அமீன் திசையில் நடத்திச் சென்றான். ராமசாமி சொன்னான், "இனிமே என்னாலே எழுதவே முடியாதுடா."

"இல்லை. முடியும். முடியும்."

"ஆனா நீ சொல்றபடிதான் நான் இனிமே எழுதி என்னாகணும்?"

"எல்லாம் சரியாயிடும். நாளைக்கு எக்ஸ்ரே வந்தா எல்லாம் தெரிஞ்சு போயிடும்."

"ரங்கநாதன், எனக்கு ரொம்ப நாளா உன்னை ஒண்ணு கேக்கணும்னு இருக்கு."

"என்ன?"

"எப்பவோ பரிட்சையிலே காப்பி அடிக்கறதுக்கு நான் எழுதினதைக் காட்டினேன்னுதானே என்னைப் பொறுத்துக்கறே?"

"இப்போ எதுக்கடா அதெல்லாம்?"

“நான் உன்னைத்தானே வாட்டி வதைக்கிறேன்? இனிமே என்னாலே எழுதவே முடியாது. என்னை யாரும் காப்பி அடிக்க முடியாது.”

“இதோ பார், அந்த போலீஸ் ஸ்டேஷன் தாண்டற வரைக்கும் சத்தம் போடாம வா.”

“நான் எப்பவாவது கதவைத் தட்டினா கதவைத் தடால்னு மூடிடாதேன்னு உன் பெண்டாட்டிகிட்டே சொல்லி வைடா.”

“பேசாம வாயேம்ப்பா. தயவு செய்து, இந்தப் போலீஸை யாவது தாண்டற வரைக்கும்.”

“இனிமே என்னாலே எழுத முடியாது. எழுதவே முடியாது.”

கபே அமீன் வந்து விட்டது.

1982